[9th December 1961

**DEPUTY SPEAKER :** இன்னும் கேள்வி கேட்கப்பட்டு, பதில் அளிக்கப்படவில்லையே? அதற்குப் பிறகு உப கேள்விகள் கேட்ட பிறகு தானே நீங்கள் அரை மணி நேர விவாதம் வேண்டும் என்று கேட்கலாம்.

* 2209 *Q.*—SRI N. K. PALANISAMI :
SRI V. K. KOTHANDARAMAN :
SRI M. SELVARAJ :
SRI S. M. ANNAMALAI :
} Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there have been any cases of dysentery, diarrhoea, cidima and swelling in the Virudhachalam taluk in the South Arcot district, Polur and Arani taluks in the North Arcot District;

(*b*) if so, the number of persons affected and the number of deaths caused thereby;

(*c*) whether any investigation has been conducted to find out the reasons for the outbreak of these diseases;

(*d*) if so, the details thereof; and

(*e*) the steps taken by the Government in this regard?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) to (*e*) A statement [a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI :** இது முக்கியமான கேள்வியாக இருப்பதினால், இதற்கு முன்பு இதுபற்றி கேள்வி கேட்கப்பட்டு, தகுந்த பதில் சொல்லப்படாத காரணத்தினால், அரை மணி நேர விவாதத்திற்கு அவகாசம் ஒதுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** பட்ஜெட் விவாதம் வருகிறது. அந்த விவாதத்தின் போது இதைப்பற்றி பேசலாம்.

DEPUTY SPEAKER : The Budget will be presented today and the hon. Member will have an opportunity to speak on this subject during the general discussion on the Budget. Moreover, I think the Hon. Minister has replied to a similar question sometime back.

**SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, இந்த நோய் அங்கே தோன்றுவதற்குக் காரணம் அவர்களுக்குப் போதுமான சத்துள்ள உணவு கிடைக்காதது தான் என்ற கருத்து தெரிவிக்கப்பட்டிருக்கிறது. எனவே, அவர்களுக்கு சத்துள்ள உணவு எது குறைவாக இருக்கிறதோ அந்த உணவை உடனடியாக அந்த வட்டாரத்திலுள்ள எளிய மக்களுக்கு அளிப்பதற்கு அமைச்சர் அவர்களிடம் ஏதேனும் திட்டம் இருக்கிறதா?

---

a Printed as Appendix II on 290 page infra.

9th December 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : சத்துள்ள உணவு இல்லாத காரணம் மாத்திரமல்ல. வேறு ஏதோ "டெக்னிக்கல்லாக" சொல்லுகிறார்கள். ஆனால், இப்போது அந்த நோய் புதியதாக இல்லை. பழைய கேஸ் அவ்வப்பொழுது 'ரிலாப்ஸ்" ஆகிறது. பொதுவாக மக்கள் எந்த வகையான சத்துள்ள உணவு சாப்பிட வேண்டும் என்பதுபற்றி பிரசாரம் நடக்கிறது. குறிப்பாக அரிசி சாப்பிடுகிற வகையிலே கைக்குத்தல் அரிசி சாப்பிட்டால் அநேகமாக அந்த சத்து கிடைக்கும். அதுதான் மக்கள் சாப்பிடுவதில்லை. கனம் அங்கத்தினர் பிரசாரம் செய்வதிலே இந்தப் பிரசாரத்தையும் சேர்த்துக்கொண்டால் நன்றாக இருக்கும்.

SRI K. ANBAZHAGAN : அந்த வட்டாரத்தில் உள்ள மக்கள் அரிசி கூட போதுமான அளவு சாப்பிடாமல், பிற வகையான தானியங்கள் சாப்பிடுவதினால் இந்த நோய் வருகிறது என்று தெரிவித்தார்கள். கைக்குத்தல் அரிசி சாப்பிடவேண்டுமென்று சொன்னாலும், அந்த வட்டாரத்தில் முழுவதும் இயந்திர அரிசி கிடைப்பதற்கு வாய்ப்பு இருப்பதைத் தடுத்து, கைக்குத்தல் அரிசி கடைகளில் விற்கப்படுவதற்கு அரசாங்கம் ஏதேனும் வழி செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கைக்குத்தல் அரிசியை மக்கள் விரும்புவது இல்லை. பழக்கம் மாறிவிட்டது. அது தான் தகராறு. அரிசி இல்லாமல் வேறு தானியங்களை சாப்பிட்டால் நல்லது. அம்மாதிரி சாப்பிடமாட்டேன் என்கிறார்கள் என்பது தான் என்னுடைய குறைபாடு.

SRI S. M. ANNAMALAI : இந்த நோய் உண்டாவதற்குக் காரணம் முக்கியமாக வறுமை என்று சொல்லப்படுகிறது. அது உண்மையா ? அப்படியானால், வறுமை காரணமாக இருப்பதை தடுப்பதற்கு என்ன நடவடிக்கையை இதுவரை சர்க்கார் மேற்கொண்டிருக்கிறார்கள் ? இப்பொழுது புதியதாக அந்த நோய் இல்லை என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இந்த நோயினால் பாதிக்கப்பட்டவர்கள் ஒரு ஆண்டு ஆனாலும்கூட இறந்து விடுகிறார்கள். இது குறித்து சர்க்கார் கவனிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வறுமையின் காரணமாக பலவித விபரீதங்கள் ஏற்படுகின்றன. ஆகையினால், இதற்கு வறுமை தான் காரணம் என்று சொல்ல முடியாது. மேலும், இதற்கு சத்துள்ள உணவு சாப்பிடாதது மாத்திரம் காரணம் இல்லை. சுற்றுப்புற சுத்தம் (என்விரன்மெண்டல் ஸானிடேஷன்) இல்லாததும் காரணம். அதோடுகூட சுத்தமான தண்ணீர் சாப்பிடாததும் சேருகிறது. சத்து இல்லாத உணவோடுகூட இந்தக் காரணங்களும் சேர்ந்து நோய்க்கு அதிக பலம் கொடுக்கிறது. அதுதான் காரணம்.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அமைச்சர் அவர்கள் கைக்குத்தல் அரிசி சாப்பிட்டால் இந்த மாதிரி வியாதி வராது என்று சொன்னார்கள். இந்த வயிற்றுக் கடுப்பு வியாதி ஏற்படக் கூடிய பகுதிகளில் இருப்பவர்கள் மாத்திரம் மெஷின் அரிசியை

[9th December 1961

சாப்பிடுகிறார்கள், மற்ற பகுதிகளில் உள்ளவர்கள் கைக்குத்தல் அரிசி சாப்பிடுகிறார்கள் என்பது அமைச்சர் அவர்களுடைய அபிப் பிராயமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கைக்குத்தல் அரிசி சாப்பிட்டால் இந்த நோய் வராது என்று சொல்ல முடியாது. அதனால் உடலில் தடுப்பு சக்தி அதிகமாக ஏற்படும். அது மாத் திரம் காரணம் அல்ல. பல காரணங்கள் இருக்கின்றன.

SRI A. A. RASHEED : Since this disease is prevalent in the four taluks of the North Arcot District, may I know what steps the Government have taken to prevent it from spreading to other taluks and other districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : No special steps are required to be taken in the other taluks. This has occurred mainly in the North Arcot and South Arcot districts and that is probably due to the low standard. That is only a guess, I should say. The exact reason is still not found out.

SRI A. GOVINDASAMY : கைக்குத்தல் அரிசி சாப்பிடாததி னால் இந்த வியாதி வருகிறது என்று அமைச்சர் அவர்கள் சொன் னார்கள். புதியதாக இப்பொழுது சோளம் சாப்பிட்டால் இந்த நோய் வராது என்று அமைச்சர் அவர்கள் பிரசாரம் செய்கிறார் கள். சோளம் சாப்பிடுவதின் காரணமாக இந்த வியாதியை தடுத்து நிறுத்த முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: சோளம் பரவாயில்லை. அரிசி சாப்பிடுகிற விதம் இப்பொழுது மாறிவிட்டது. மெஷின் அரிசி சாப்பிட்டால் 'பி' வைடமின் இல்லை. மற்றபடி வேறு தானியம் சாப்பிட்டால் ஓர் அளவுக்கு நன்றாக இருக்கும். மக்கள் அதற்கு இஷ்டப்படுவதில்லை. காலையில் எழுந்தால் டீ சாப்பிடத் தான் போகிறார்கள். அது தான் பெரிய கஷ்டமாக இருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : மேஜையின் மீது வைக்கப்பட் டிருக்கிற அறிக்கையில் வட ஆற்காடு ஜில்லாவில் ஆரணி, போளூர் தாலுகாக்களுக்கும், தென் ஆற்காடு ஜில்லாவில் விருத்தாசலம் தாலுகாவிற்கும் புள்ளிவிவரம் தரப்பட்டிருக்கிறது. வட ஆற் காடு, தென் ஆற்காடு மாவட்டங்களில் எத்தனை பேர்கள் இறந் திருக்கிறார்கள் என்பதற்கு புள்ளிவிவரம் இருக்கிறதா ? அப்படி யானால் சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வட ஆற்காடு ஜில்லா வில் வந்தவாசி, செங்கம், போளூர், ஆரணி, திருவண்ணாமலை, செய் யார் தாலுக்காக்களிலும், தென் ஆற்காடு ஜில்லாவில் விருத்தா சலம், கள்ளக்குரிச்சி, திருக்கோயிலூர், விழுப்புரம் தாலுக்காக் களிலும் இந்த நோய் இருந்தது. வட ஆற்காடு ஜில்லாவில் 6,906 பேர்களுக்கு நோய் வந்து, அதிலே 531 பேர்கள் இறந்து விட்டார்கள். தென் ஆற்காடு ஜில்லாவில் 4,880 பேர்களுக்கு நோய் வந்தது. அதிலே 564 பேர்கள் இறந்துவிட்டார்கள்.